[Sri M. A. Manickavelu] [14th February 1959

அதைப் பின்னல் வைத்துக் கொள்ளலாம். முதலில் நகரத்திற்கு ஏற் படுத்திக்கொள்ளலாம் என்பது என் கருத்து. இருந்தாலும், இதில் கனம் அங்கத்தினர் அவர்கள் ரொம்பவும் ஆர்வம் காட்டினர்கள். அவர்கள் இன்னும் நல்ல ஆலோசனைகளைச் சொல்லுவார்கள் என்ற நம்பிக்கையுடன் இதற்காக ஒரு கமிட்டி அமைப்பதற்கு நான் ஒத்துக்கொள்கிறேன். (ஆர வாரம்) இந்தக் கமிட்டி நன்ருக வேலை செய்து நல்ல யோசனைகளைச் சொன்னல், நகரை நல்ல முறையில் சுகாதாரமான முறையில் வைக்க முயற்சிக்கலாம் என்று நம்புகிறேன். இந்தக் கமிட்டியில் ஐந்து பேருக்கு மேல் இருக்கக் கூடாது என்றும் கேட்டுக்கொள்கிறேன். அதிகமான அங் கத்தினர்கள் இருந்தால், சரியான வேலை நடைபெருது. இந்தத் தீர் மானத்தைக் கொண்டுவந்தவரும், இதை ஆமோதித்தவரும் அங்கத் தினர்களாக இருக்க வேண்டும். வேறு மூன்று அங்கத்தினர்களையும் கலந்து ஆலோசித்துப் போட்டுக் கொள்ளலாம். இந்தக் கமிட்டி, அரசாங் கம் உடனே செய்யக்கூடிய முறையில் நல்ல சிபாரிசுகளைச் செய்தால், அதன்படி அரசாங்கம் வேலை செய்யும் திட்டங்களை ஆராயலாம். நல்ல முறையில் பிரசாரம் இதைப்பற்றிச் செய்ய வேண்டும். ஆக்கம் தருவதற் கான முறையில் யோசனைகளைத் தருவதற்காக இந்தக் கமிட்டியை நிய மிப்பதற்கு நான் ஒப்புக்கொள்கிறேன் என்பதைத் தெரிவித்துக்கொண்டு இந்தத் தீர்மானத்தை வற்புறுத்த வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

*SRI V. V. RAMASWAMI : கனம் தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் என்னுடைய தீர்மானத்தின் நோக்கத்தை ஒப்புக் கொண்டு அதற்காக ஒரு குழுவையும் போட சம்மதித்திருப்பதைக்கேட்டு நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். இதற்கு ஒத்துக்கொண்ட அமைச்சர் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்வதோடு கூட நான் கொடுத்திருக்கும் தீர்மானத்தை வாபஸ் பெற்றுக்கொள்கிறேன்.

The Resolution was, by leave, withdrawn.

The House next adopted a motion that Resolution No. 2 relating to the transaction of business of the Legislature in Tamil and Resolution No. 4 relating to the use of Tamil for all ceremonial and public functions be taken up one after the other.

## (2) TRANSACTION OF BUSINESS OF THE LEGISLATURE IN TAMIL.

*VIDWAN T. MUTHUKANNAPPAN : மாண்புமிக்க மன்றத் தலை வர் அவர்களே, "1956-ம் ஆண்டின் சென்னை மாநில மொழிச் சட்டத் தின் பகுதிகள் செயல்படுவதற்குரிய நடவடிக்கைகளை உடனடியாக மேற் கொள்ளவேண்டுமென்றும், சட்ட மன்ற அலுவல்கள் இம்மாநில ஆட்சி மொழியாகிய தமிழிலேயே நடைபெறவேண்டுமென்று உடனே பிர கடனப்படுத்திவிட வேண்டுமென்றும் இம்மன்றம் அரசாங்கத்திற்கு சிபாரிசு செய்கிறது", என்ற தீர்மானத்தை நான் முன்மொழிகிறேன்.

DR. A. CHIDAMBARANATHAN : நான் அதை வழி மொழி கிறேன்.

3-20 p.m. MR. CHAIRMAN : Resolution moved—

"This Council recommends to the Government that immediate steps be taken to implement the provisions of the Madras Official Language Act, 1956 and necessary notifications issued, in order that the business of the Legislature be transacted in Tamil, the Official Language of the State."

The hon. Member can now speak on the Resolution.

14th February 1959]

* **VIDWAN T. MUTHUKANNAPPAN**: தலைவர் அவர்களே, இந்திய அரசியல் சட்டத்தின் 346, 347-வது விதிகளின்படி, அந்தந்த இராஜ்யங்கள் அவ்வவற்றிற்குரிய தாய் மொழியை அல்லது மாநில மொழியை அரசியல் மொழியாக மேற் கொள்ளலாம் என்று குறிப்பிட்டிருக்கிறது. அதற்கேற்ப நம்முடைய மாநிலம் 1956-ம் ஆண்டிலே ஒரு சட்டத்தைக்கொண்டு வந்திருக்கிறது. அந்தச் சட்டத்தின் 5-வது விதியிலே

'(i) In Bills introduced in or amendments thereto moved in or Acts passed by the Legislature of the State of Madras;

(ii) in Ordinances promulgated under Article 213 of the Constitution;

(iii) in orders, rules, regulations and bye-laws issued by the State Government under the Constitution or under any law made by Parliament or Legislature of the State shall be Tamil on and from such date as the State Government may by notification specify.'

என்று இருக்கிறது. இந்தச் சட்டம் 1956-ம் ஆண்டிலே கொண்டுவரப் பட்டது. இன்றைக்கு இரண்டு ஆண்டுகள் ஆகின்றன. இன்னும்—இன்றைய வரையில் இந்தச் சட்ட சபை அலுவல்கள் தமிழிலேயே நடைபெறவில்லை என்று நினைக்கிறபோது, உண்மையிலேயே எனக்கு வருத்தமாக இருக்கிறது. இந்தத் தீர்மானத்தைக் கொண்டுவருவது எனக்குப் பெரு வருத்தத்தைத் தந்திருக்கிறது என்று தாழ்மையாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நம்முடைய நாடு சுதந்திரம் அடைந்துவிட்டது. விடுதலை அடைந்து விட்டது. நமது நாடு விடுதலை அடைந்த வெற்றித் திரு நாடு. இதன் தாய் மொழி—தமிழ் மொழி—அரசியல் மொழியாக ஆக்கப் பட்டும் இன்னும் அது பூர்ணமாகச் செயல் படவில்லை என்பது வருந்தத் தக்கது. இதைப் பற்றி அரசியலார் ஒன்றும் செய்யாமல் வாளாவிருக்கவில்லை. தங்களாலான முயற்சிகளைச் செய்து கொண்டு வருகிறார்கள் என்று எனக்குத் தெரியும். நமது கனம் கல்வி அமைச்சர் அவர்களுக்குள்ள தமிழ் ஆர்வம்—தமிழ் உணர்ச்சி—தமிழ் உத்வேகம், எங்களுக்கு எவ்வளவு உணர்ச்சி—ஆர்வம்—உத்வேகம்—இருக்கிறதோ அதைக் காட்டிலும் பன் மடங்கு அதிகமாக இருக்கிறது என்பதும் எனக்குத் தெரியும். ஆட்சிச் சொல் அகராதியை வெளியிட்டிருக்கிறார்கள்; கலைச் சொற்கள் வெளி வரவும் பல ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள்; சட்ட இயல், பொறி இயல், மருத்துவம், ஆசிரியர் பயிற்சி பற்றிய துறைகளுக்கெல்லாம் வேண்டிய சொற்களை ஆக்குவதற்கு ஆவன செய்திருக்கிறார்கள்; தமிழ் வளர்ச்சிக்காகவும், தமிழ் ஆராய்ச்சிக்காகவும் ஒரு தமிழ் ஆராய்ச்சிக் குழு அமைத்திருக்கிறார்கள்; இவ்வளவும் செய்திருக்கிறார்கள். ஆனால், இன்னும் இரண்டு ஆண்டுகள் ஆகியும்—இந்தச் சட்ட சபையிலே தாய் மொழியாகிய தமிழ் மொழியைச் செயல்படச் செய்யவில்லை. தமிழ் மொழியிலே இங்கு காரியம் ஏதும் நடைபெறவில்லை. ஏன் இங்கு தமிழ் மொழி செயல்படவில்லை? தமிழ் மொழி ஆட்சி மொழியாக விட்ட பின்னரும் அம்மொழியில் ஏன் செயல்கள் நடைபெறவில்லை? போதுமான சொற்கள் தமிழிலே இல்லையா? அப்படி நினைப்பது தவறு. தமிழ் மொழி போல வளமான மொழி வேறில்லை என்று மேல் நாட்டு ஆசிரியர்கள்கூட மிகவும் ஆணித்தரமாகக் கூறியிருக்கிறார்கள். மேல் நாட்டு அறிஞர்கள் தமிழ் முழுமையடைந்த உயர் தனிச்செம்மொழியென்று கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது. கால்ட்வெல், போப், வீரமாமுனிவர் போன்ற மேல் நாட்டு அறிஞர்கள் தமிழ் முழுமையடைந்த— உயர்தனிச் செம்மொழியென்று கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது. நம் தமிழ்மொழி நடையழகு, தொடையழகு, சொல்லாழம், பொருளாழம், இனிமை, எளிமை போன்ற அனைத்தும் ஒருங்கே அமைந்தது என்பதை ஒப்புக் கொள்வார்கள். வான் நிலை ஆராய்ச்சியிலே சிறந்தது; விண்மீன் நிலை ஆராய்ச்சியிலே சிறந்தது; கோள் நிலை—கிரகங்கள் ஆராய்ச்சியிலே சிறந்தது; பௌதிகம், விஞ்ஞானம், ரசாயனம், வைத்தியம், உடல் நிலை, உள்ள நிலை எல்லாவற்றையும் கற்றுத் தேர்ந்து இருந்தார்கள்.

[Vidwan T. Muthukannappan] [14th February 1959

பண்டைய தமிழ் நாட்டு மக்கள்—இவையெல்லாம் 2,000 ஆண்டுகளுக்கு முன்னர் பாடப்பட்ட பத்துப்பட்டு, எட்டுத்தொகை போன்ற சங்க நூல்களில் அழகாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. நமக்கு வேண்டிய வார்த்தைகள் இல்லையா? வார்த்தைகள் இல்லாத குறையினால் கொண்டுவரவில்லை என்று சொல்ல முடியுமா?

குறள் கூறுவது போன்ற அரசியலை வேறு எந்த நாட்டிலோ, மொழியிலோ இல்லை. சிறந்த அரசியல், நல்ல அமைச்சயியல், நல்ல குடியியல், நல்ல படையியல் போன்றவைகளுக்கு அழகாக இலக்கணம் அமைத்து—வகுத்து—தந்திருக்கிறார் குறள் தந்த வள்ளுவப் பெருந் தகை. எனவே, தமிழ் மொழி—தாய் மொழி—வளமார்ந்த மொழி. தமிழ் நாடுதான் வரண்டு போனதே தவிர, தமிழ் மொழி வரண்டு போகவில்லை. அப்படிச் செய்யவும் முடியாது. தமிழ் மொழி வற்றாத வளஞ்சுரக்கும் வன் மொழி.

" வான மளந்தது அனைத்தும் அளந்திடும்
வண்மொழி வாழிய வே "

என்று தேசீயக் கவி பாரதியார் வெகு அழகாகக் கூறியிருக்கிறார்.

இந்த மொழியிலே எத்தனையோ சிறப்புகள் இருக்கின்றன. பிற மொழியைச் சுவீகாரம் செய்துகொள்வதிலே இந்த மொழி போன்ற சிறந்த மொழி வேறு இல்லை. பிற மொழியைச் சுவீகாரம் செய்து கொள்ளும் ஆற்றல் அதைத் தன்னுடைய மகனாக—தன்னுடைய மகளாக தன் மயமாகச் செய்துகொள்ளக்கூடிய திறன் தமிழ் மொழிக்குத்தான் அதிகம் உண்டு என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். எடுத்துக் காட்டாக—பிற மொழியைத் தன்மயமாக்கிக் கொண்டதற்கு உதாரணங் களாக—இங்கே சிலவற்றைக் குறிப்பிட விரும்புகிறேன். " டவல் " என்று ஆங்கிலத்திலே ஒரு பதம் இருக்கிறது. அதைத் தமிழிலே " துவால் " என்று சொல்கிறார்கள். " கப் " என்ற ஆங்கில வார்த்தை " கோப்பை " என்று தமிழிலே வருகிறது. " காஷ் கீப்பர் " என்ற பதத்திற்குத் தமிழிலே " காசுக் கப்பரை " என்று சொல்லுகிறார்கள். தன்னுடைய வார்த்தையைப் போன்று தன்மயமாக்கிக்கொள்வதிலே தமிழைப் போல உயர்ந்த—சிறப்பு வாய்ந்த—மொழி வேறு ஒன்றுமில்லை என்று நிச்சயமாகச் சொல்ல முடியும்.

குமரி முதல் இமயம் வரை ஒரு மொழி வைத்து அரசாண்டான் சேர லாதன். அது மட்டுமா ? பர்மா, சீனா, மலேயா, ஜாவா, சுமித்ரா, போர்னியோ, ரோம், இடாலி, எகிப்து போன்ற வெளிநாடுகளுக்கெல்லாம் சென்று ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நமது தமிழ்ப் பண் பாட்டினைப் பரப்பியிருக்கிறார்கள். அதன் நிலையை உயர்த்தியிருக்கிறார்கள். கவியரசர் பாரதியார் சொல்லுகிறார்—

சிங்களம் புட்பகம் சாவக—மாதிய
தீவு பலவினுஞ் சென்றேறி—அங்கு
தங்கள் புலிக்கொடி மீன் கொடியும்—நின்று
சால்புறக் கண்டவர் தாய்நாடு.

சீன மிசிரம் யவனரகம்—இன்னும்
தேசம் பலவும் புகழ்வீசிக்—கலை
ஞானம் படைத்தொழில் வாணிபமும்—மிக
நன்று வளர்த்த தமிழ்நாடு—என்று.

இவ்வளவு சிறந்த—வளர்ந்த—முழுமையடைந்த மொழிக்குப் பஞ்சம் வந்துவிட்டதா ? இல்லை—ஏராளமான சொற்கள் இருக்கின்றன—ஆராய்ந்து பார்க்கத்தான் வேண்டும்.

இந்தச் சந்தர்ப்பத்திலே தமிழ் நாட்டு அரசியலைப்பற்றி நினைக்கும் போது, பண்டைக் காலச் சோழ அரசர்கள் நினைவு வருகிறது. ஆயிரம் ஆண்டுகட்கு முன் இருந்த சோழப் பேரரசு சிறந்த ராஜ்ய முறைக்கு—அரசியல் முறைக்கு—விளக்கம் தந்திருக்கிறது. உலகத்திலே இன்றைக்குப் பல நாடுகளிலே பஞ்சாயத்து முறை இருக்கின்றது. இதற்கு முதன் முதலாக வித்திட்டது சோழ நாடு—தமிழ் நாடு—என்று நாம் பெரு மகிழ்ச்சியடைகிறோம். சோழ நாடு—சோழப் பேரரசு—ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, பெருநாடு, மண்டலம், வள நாடு, கோட்டம், கூற்றம், ஊர் என்று இப்படிப் பிரிக்கப்பட்டிருந்தது. தேர்தல் முறையை உலகத்திற்கே தந்தது இந்தத் தமிழ் நாடு தான் என்று கூடத் துணிந்து கூறலாம். முன்பெல்லாம் குடவோலை முறையில் தேர்தல் நடத்தினார்கள். தேர்தலை நடத்துவதற்கு எத்தனையோ அதிகாரிகள் இருந்தார்கள். தேர்தலை நடத்துகின்றவர்—ரிட்டர்னிங் ஆபீஸர்—கரணத்தான் என்று அழைக்கப்பட்டார். கிராம ஆட்சி ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஐந்து வாரியங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அதனால் தான் அதற்குப் பஞ்சாயத்து என்று பெயர் வந்தது. சம்வத்ரை வாரியம், தோட்ட வாரியம், ஏரி வாரியம், பொன் வாரியம், பஞ்ச வாரியம் என்ற ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது கிராம ஆட்சி. சபை நடக்கும் இடங்களைப் பொது மாளிகை, மன்றம், மண்டபம் என்று அழைத்தார்கள். மாராயன் என்று அழைத்தார்கள் அரசன் சொல்வதை எழுதிக்கொண்டவனை. திருமந்திர ஓலை என்று வழங்கப்பட்டார்கள் எழுதுபவர்கள். முக்கியமானவனுக்கு திருமந்திர ஓலை நாயகம் என்ற பெயர் இருந்தது. அரசனுக்குத் துணையாக ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்று சொல்லப்பட்ட சபையினர் இருந்தனர். " ரெஜிஸ்ட்ரேஷன் ஆபீஸ் " என்பது ஆவணக்காரி என்று வழங்கப்பட்டது. வக்கீலுக்கு சேக்கிழார் தந்த பெரிய புராணத்திலே " மன்றாடி " என்று நயமாகக் கூறப்பட்டுள்ளது. எவ்வளவு அழகான பதம் ? இப்படியெல்லாம் வளர்ந்தது நமது மொழி—இதிலே சொல் வளம் குறைந்து விட்டதா ? அல்லது பொருள்வளம் தான் வரண்டு விட்டதா ? பின் ஏன் முன்னேறத் தயங்குகிறோம் ? இந்த அவல நிலைக்குக் காரணம் என்ன ? தாய் மொழியாகிய தமிழை, ஆழ்ந்து இலக்கண இலக்கியங்களை நன்குணர்ந்து பலர் கற்கவில்லை. நுனிப்புல் மேய்ந்துவிட்டு ஒன்றும் புரியாது தக்க சொற்கள் இல்லையென்று பிதற்றுகிறார்கள்.

இந்தச் சமயத்திலே எனக்கு ஒன்று ஞாபகத்திற்கு வருகிறது தமிழ், ஆங்கிலம் ஆகிய இரண்டுக்கும் உள்ள தொடர்பு என்ன ? தமிழ் இருக்கிறதே, அது நம்மைப் பெற்று, சீராட்டி பாலூட்டித் தாலாட்டி வளர்த்த அன்னை. ஆங்கிலம்—தாதி—செவிலித் தாய்—தாய்க்கு உதவி செய்ய வந்தவள். இப்போது பெற்ற தாயை மறந்து, செவிலித் தாயையே பெரும் தாயாகக் கருதி வருகிறார்கள். தாயாகக் கருதியதையும் விடுத்து ஆருயிர்க் காதலியாகவே கொண்டு, கைகோர்த்துக் களிநடம் புரிய ஆரம்பித்துவிட்டார்கள். அதனால் வந்த விபரீதம் தான் இது.

ஆறு மாதங்களுக்கு முன்னே, சிறப்பு மிக்க பெரியார் திரு. பி. டி. ராஜன் அவர்கள் கூறிய உரை என்னுடைய கவனத்தை இப்பொழுது கவர்ந்திருக்கிறது. அவர் சொன்னார், " தமிழ் மொழியைப் பேசினால் தான், தமிழன் என்று சொல்ல முடியாது ; தமிழ் மொழியைப் பேசாவிட்டாலும் பாதகம் இல்லை ; தமிழனுக்குரிய பண்பாடு இருந்தால் போதும் " என்று.

நான் சொல்கிறேன்—தமிழ் மொழி சோறு, ஏனைய பண்பாடுகள் எல்லாம் துணைக் கறிகள். சோறு இல்லாமல் துணைக் கறிகளை மட்டும் உண்டு உயிர் வாழ முடியுமா ? நிச்சயமாக முடியாதல்லவா ? இப்படியே மொழி பேசலாம், தன்னுடைய தாய் மொழியைப் பயிலாமல், வெறும் பண்பாடுகளோடு மட்டும் இருந்தால் போதுமா? எனவே, சிறந்த தமிழனாக இருக்க வேண்டுமானால், தமிழ் மொழி பேச வேண்டும். தமிழ் மொழியிலே ஆற்றல் வேண்டும் ; அதோடு பண்பாடும் இருத்தல் வேண்டும். 3.30 p.m.

[Vidwan T. Muthukannappan] [14th February 1959

இங்கே எத்தனையோ கனம் அங்கத்தினர்கள் பற்பல சமயங்களில் ஆங்கிலத்தில் பேசுகிறார்கள். அங்கு அமர்ந்திருக்கும் நண்பர் திரு. பிள்ளை அவர்கள் கூட ஒரு முறை மிக்க வருத்தத்தோடு, " தமிழிலே பேசுங்களேன் " என்று கேட்டார்கள். அது உள்ளத்தைத் தொடுவதாக இருந்தது. அதைக் கேட்டுங்கூட, இப்பொழுதுதான் ஆங்கில நாட்டிலேயிருந்து வானூர்தியில் ஏறி அழகான மரீனாவில் இறங்கி இங்கு வந்தது போல் பேசுகிறார்கள் சில கனம் அங்கத்தினர்கள். அவர்களை நான் குறை கூறவில்லை. அது எதைக் காட்டுகிறது ? இன்னும் நாம் ஆங்கில மொழியாதிக்கத்திலிருந்து விடுதலை அடையவில்லை என்பதைத் தான் காட்டுகிறது. ஆங்கிலேயரிடம் அடிமைப்பட்டுக் கிடந்த அடிமை ரத்தம் இன்னும் உடலிலிருந்து நீங்காது ஓடுகிறது என்பதைத்தான் காட்டுகிறது. தமிழில் பேச வராத நண்பர்கள் ஆங்கிலத்தில் பேசுவார்களானால் அதை நான் ஒத்துக்கொள்கிறேன். ஆனால், தமிழை நன்றாகப் பேசுபவர்கள், படித்தவர்கள் இருக்கிறார்களே, அவர்களே, தமிழ் பேசாமல், தாய் மொழியில் பேசாமல், அழகிய கன்னித் தமிழ் மொழியில் பேசாமல், ஆங்கிலத்தில் பேசுகிறார்கள் என்றால், இது வெட்கக்கேடானது என்று வருத்தத்தோடு குறிப்பிடவேண்டியிருக்கிறது. ஒருவேளை அதைத்தான் கௌரவமாக நினைக்கிறார்களோ என்னவோ. அப்படி நினைப்பது பாராட்டத்தக்க நிலை அல்ல, அதுபோலிக் கௌரவம் என்று தான் கூறுவேன். எனக்குத் தெரியும்—மூன்று நான்கு அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். திரு. ராஸா கான் அவர்களைப் போன்ற கனம் அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். இவர்கள் ஆங்கிலத்தில் பேசுகிறார்கள். அவர் பேசுவதை ஒத்துக்கொள்ளலாம்.

Sri MOHAMED RAZA KHAN : நம்ம எல்லாம் தமிழிலே எப்படிப் பேசுகிறது ?

* Vidwan T. MUTHUKANNAPPAN : கனம் அங்கத்தினர் திரு. ராஸா கான் அவர்களும் தமிழில் பேச ஆரம்பித்துவிட்டார் என்பதைப் பார்க்கும்போது எனக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது.

மாண்புமிக்க பெரியார் டாக்டர் லட்சுமணசாமி முதலியார் அவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் மேதை ; தமிழ்நாட்டு மேதை ; பண்பு வாய்ந்த ஒரு மேதை ; ஆனால், அவருக்குத் தமிழ் பேச வராது என்பது எனக்குத் தெரியும். நான் சொல்கிறேன் : என்னைப் போல் தமிழும் ஆங்கிலமும் படித்தவர்கள் தமிழிலே பேசிக்கொண்டு, ஆங்கிலத்தையும் மறக்காமலிருப்பதற்கு டாக்டர் லட்சுமணசாமி முதலியார் அவர்களைப் போன்ற மேதைகள் மடை திறந்த வெள்ளம் போல் ஆங்கிலத்திலேயே பேசவேண்டுமென்று நான் விரும்புகிறேன். அப்படிச் செய்வது எங்களுக்கு ஆங்கிலம் மறக்காமல் இருப்பதற்கு உதவும். அவர்களைப் போன்றவர்கள் ஆங்கிலத்தைப் பேசுவதைப்பற்றி நான் மறுக்கவில்லை. ஆனால், தமிழைப் படித்தவர்கள், அதுவும் தெளிவாகத் தமிழிலே பேசக்கூடிய ஆற்றல் உடையவர்கள், தமிழிலே பிறந்து தமிழராய் வாழ்கின்றவர்கள் தமிழை மறந்து, தமிழுக்குத் துரோகம் செய்துவிட்டு ஆங்கிலத்தில் பேசுகிறார்கள். அதைத்தான் என்னுடைய உள்ளம் ஏற்றுக்கொள்ள மறுக்கிறது. உள்ளம் உருகுகிறது ; வேதனை மீதார்கிறது.

இந்த இடத்தில் நம்முடைய நாட்டுக் கவிஞர் ஒருவர் சொன்ன பாட்டு ஒன்றைச் சொல்லிக்கொண்டு மேலே போகிறேன். தமிழ் மொழி சோறு; தமிழனுக்குரிய பண்பாடுகளெல்லாம் துணைக் கறிகள் என்று முன்னே குறிப்பிட்டேன். அதைத்தான் திரும்பவும் சொல்ல ஆசைப்படுகிறேன். துணைக்கறிகளைச் சாப்பிட்டு மட்டும் ஒருவன் ஜீவித்து இருக்க முடியாது. சோறு மிக அவசியம். அதுபோல, மொழி பேச முடியாமல்—தெரியாமல் வெறும் பண்பாடு மட்டும் இருந்தால் பயன் இல்லை. அவன் உண்மைத்

14th February 1959] [Vidwan T. Muthukannappan]

தமிழன் ஆகமாட்டான். கவிஞர் சொல்கிறார் : சோறும் கறிகளும் உடலை வளர்க்கும் ; ஆனால் தமிழ் மொழி உயிரை—உணர்வை—வளர்க்கும் ஆற்றல் உடையது என்று.

"செந்நெல் மாற்றிய சோறும்—பசுநெய்
தேக்கிய கறியின் வகையும்

தன்னிகர் தானியம் முதிரை, கட்டித்
தயிரோடு மிளகின் சாறும்

நன்மதுரம் செய் கிழங்கு—கானில்
நாவில் இனித்திடும் அப்பம்

உன்னை வளர்ப்பன தமிழா—உயிரை
உணர்வை வளர்ப்பது தமிழே."

உணர்வையும் உயிரையும் ஊட்டி வளர்ப்பது தமிழ் மொழிதான் என்பதைக் கனம் அங்கத்தினர்கள் மறந்துவிடக் கூடாது. உயர்ந்த அறிவாளிகள், கற்றறிந்த பெரியோர்கள், அனேக துறைகளிலே சான்றோர்கள் இருக்கும் இந்தச் சபையிலே தாய் மொழியாம் தமிழ் மொழியிலே என் பேசக்கூடாது ? இனிமேலாவது தமிழில் பேச வேண்டும். இங்கு எல்லாச் செயல்களும் தமிழிலே நடைபெற வேண்டும் ; நடைபெறுவதற்கு அரசாங்கம் எல்லாவிதமான நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேலும், அதிருஷ்டவசமாக நம்முடைய ராஜ்யத்தை நிர்வகிக்கும் பொறுப்பை மேற்கொண்டிருக்கும் அமைச்சர்கள் அனைவருமே தமிழில் சிறந்த பாண்டித்தியம் உள்ளவர்கள் என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். கல்வி அமைச்சர் அவர்களைப்பற்றி நான் ஏற்கனவே சொன்னேன். இந்த மன்றத்தின் முதல்வர் கனம் திரு. வெங்கட்ராமன் அவர்கள் அன்று கைத்தறியாளர் கூட்டத்தில் பேசினார்கள். என்ன அழகாகத் தமிழிலே பேசுகிறார்கள் ; அகத்துறை அமைச்சர் கனம் திரு. பக்தவத்சலம் அவர்களிடத்தில் ஒரு நல்ல பழக்கம் இருப்பதை நான் காண்கின்றேன். இந்தச் சபையில் அவர் மசோதாவின் மீது பேசும்போதும், விவாதத்திற்குப் பதில் அளிக்கும்போதும் அருமையான, அழகான, தெளிவான தமிழிலே பேசுகிறார்கள். அந்தத் தமிழ் நம்முடைய உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்து பசுமரத்தாணிபோலப் பதிந்து விடுகிறதைப் பார்க்கிறோம். இப்படி, நம்முடைய அமைச்சர்கள் அனைவரும் அழகாகப் பேசுகிறார்கள். அவர்கள் தமிழிலே பேசினால் எப்படி நம்முடைய மனதில் படுகிறதோ அப்படி ஆங்கிலத்தில் பேசினால் பதிவது இல்லை. ஆங்கிலம் அயல் மொழி தானே. அமைச்சர் அவர்களை நான் வேண்டிக்கொள்ளுகிறேன் : இனிமேல் சட்டசபை நடவடிக்கைகளெல்லாம் நம்முடைய கன்னித் தமிழில், ஆருயிர் அன்னைத் தமிழிலேயே நடைபெற வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, அப்படி நடந்தால் தான் இது உண்மையிலேயே சுதந்திர நாடாக, விடுதலை அடைந்த வெற்றித் திரு நாடாக இயங்க முடியும் என்று சொல்லிக்கொண்டு, இந்தத் தீர்மானத்தைக் கனம் அங்கத்தினர்கள் அனைவரும் ஏகமனதாக ஒத்துக்கொள்ள வேண்டுமென்றும், இதை நடைமுறையிலே ஏற்று வெற்றிகரமாக நடத்த வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டு, உரையை முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

SRI MOHAMED RAZA KHAN : கனம் தலைவர் அவர்களே, எல்லாம் தமிழிலேதான் நடக்கவேண்டும் என்று வைத்துவிட்டால், தமிழ் தெரியாத என்னைப்போன்றவர்கள் எல்லோரும் இதை விட்டுவிட்டு எங்கே போவது ?

VIDWAN T. MUTHUKANNAPPAN : நான் சொன்னேன் நண்பர் திரு. ராஸா கான் போன்ற கனம் அங்கத்தினர்கள் எல்லாம் ஆங்கிலத்திலேயே பேசலாம் என்று.

[14th February 1959

* SRI S. T. ADITYAN: சபாநாயகர் அவர்களே, தமிழிலேதான் கூடுமானவரையிலும் சட்டசபை நடவடிக்கைகள் நடக்க வேண்டும் என்பதை ஆட்சேபிப்பதற்கு யாரும் இல்லை. ஆகையால், அந்த விஷயத்தைப்பற்றி வெகு அழுத்தந்திருத்தமாக மேற்கொண்டு பேச வேண்டிய அவசியம் இல்லை. ஆனல், அதற்கு இப்பொழுதிருக்கும் இடைஞ்சல்கள் என்ன, கஷ்டங்கள் என்ன என்ற விஷயத்தை மாத்திரம்தான் நாம் ஆராய வேண்டிய நிலைமையில் இருக்கிறோம்.

எனக்குத் தெரிந்தவரை, மூன்று கஷ்டங்கள் இருப்பதாகத் தெரிகின்றன. அதாவது, இயந்திர சாதனங்கள் சம்பந்தப்பட்ட மட்டில் தமிழ் டைப்ரைட்டர், லினோ டைப், தந்தியடிக்கும் இடங்களில் அதற்குரிய தந்தி சாதனங்கள் ஆகிய இம்மூன்று இயந்திரங்களையும் தமிழ் ஆக்குவதற்கு முயற்சி செய்ய வேண்டியது முதல்படியாக நடக்கவேண்டிய முயற்சி. அந்த முயற்சி வெற்றி பெற்றாலன்றி, அந்த முயற்சி பூரணமாக இல்லாவிட்டாலுங் கூட ஓரளவாவது சில சர்க்கார் ஆபீஸ்களிலாவது தமிழ் டைப்ரைட்டர் மெஷின்களை வைத்தாலொழிய, சர்க்கார் சம்பந்தப்பட்ட மட்டில், தமிழில் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்வதிலே மிகவும் கஷ்டம் இருக்கிறது. அதை உணர்ந்துதான் ஆக வேண்டும். இது முதல் விஷயம்.

இரண்டாவது விஷயம் தமிழ் ஷார்ட்ஹாண்டு. அதாவது சுருக்கெழுத்து. சுருக்கெழுத்து வளர்ச்சியடையாத வரையிலும், சுருக்கெழுத்தாளர்கள் தேவையான அளவு இல்லாத வரையிலும், ஒவ்வொரு ஆபீஸிலும் மிகுந்த கஷ்டம் இருந்துகொண்டிருக்கும். பிட்மன் ஷார்ட்ஹாண்டு என்ற ஒரு முறை இருக்கிறது. அது முற்றிலும் தமிழுக்கு அனுசரணையாக உள்ள முறை. க்ரெக் முறையொன்று இருக்கிறது. அதை அதிகம் பேர் அனுசரிப்பதைக் காணோம். பிட்மன் முறையானது வெகு எளிதிலே தமிழுக்குப் பொருந்தக் கூடியதாக இருக்கிறது. தமிழ் சுருக்கெழுத்து, தமிழ் டைப்ரைட்டர் துறைகளிலே நம்முடைய கல்வி அமைச்சர் அவர்கள் செய்திருக்கும் பெரும் பணியை நாம் எல்லோரும் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

இதுதான் அடிப்படையான விஷயம். அடிப்படையான விஷயம் இது இருக்க, தமிழிலே ஆர்வம் உள்ளவர்கள் வேறு என்ன என்னவோ சண்டை போட்டுக்கொண்டு காலம் போக்குவது நம்மைப் போல் உள்ளவர்களுக்குக் கஷ்டத்தைக் கொடுக்கக்கூடிய விஷயம். உண்மையிலேயே நடக்க வேண்டிய வழி வாய்க்கால்களைத் தெரிந்துகொள்ளாதவர்கள்தான் அப்படி சண்டை போட்டுக்கொண்டிருப்பார்கள். அதாவது, வார்த்தையின் வடிவம் என்ன, அந்த வார்த்தையின் மூலம் என்ன, நம் முன்னோர்கள் உபயோகித்த முறை என்ன என்பதெல்லாம் ஒரு பக்கம் இருந்தபோதிலுங் கூட, தமிழ் அழகு ஒரு பக்கம் இருந்தபோதிலும்கூட, அரசியலார் சம்பந்தப்பட்ட மட்டிலே, அவர்கள் தமிழை உபயோகிப்பது அதனுடைய அழகைப் பற்றியல்ல; இலக்கணத்தைப் பொறுத்து அல்ல; அவர்களுடைய கடிதப் போக்குவரத்து, அவர்களுடைய உத்திரவு முதலியவைகள் சரியானபடி தமிழ் மொழி மூலமாக நடந்து, அப்படியே பிறப்பிக்கும் உத்திரவுகளும், நடக்கும் கடிதப் போக்குவரத்துக்களும் சரியானபடி அர்த்தம் செய்துகொள்ளப் படவேண்டும் என்பதே அரசாங்கத்தின் லட்சியமாக இருக்கவேண்டும். அர்த்தத்தைச் சரியாகத் தெரிந்துகொண்டு, பிசகு இல்லாதபடி எழுதக் கூடியவாறு ஏற்பாடுகள் நல்ல முறையில் நடந்திருக்கின்றனவா என்பது தான் அரசியலார் சம்பந்தப்பட்ட வரையில் முக்கியமான விஷயம்.

இந்த இரண்டு தடங்கல்கள் போக, மூன்றாவது ஒரு தடங்கல் இருக்கிறது. எனக்குத் தெரிந்த வரையில், உள்ளதை உள்ளபடியே சொல்லப் போகிறேன். தயவுசெய்து பெரியவர்கள் மன்னித்துக்கொள்ள வேண்டும். அந்த மூன்றாவது தடங்கல் என்னவென்று கேட்டால், காரண காரியங்களைச் சரியானபடி கவனித்துக்கொள்ளாதபடி, 'பழைய காலத்திலே "மன்றாடியார்" என்ற வார்த்தை கையாளப்பட்டிருந்தது, அந்த வார்த்

14th February 1959] [Sri S. T. Adityan]

தையையே இன்றும் போடவேண்டும்' என்று சொல்வது தான் மூன்றுவது தடங்கல். இன்று "வக்கீல்" என்ற பெயர் இருக்கிறது. யாருக்கும் அர்த்தமாகக்கூடிய வார்த்தை. "வக்கீல்" என்பதை மாற்றி இன்னொரு புது வார்த்தை "மன்றுடியார்" என்று போடவேண்டும் என்று சொல்வது—அதாவது பழைய காலத்தைத் திரும்பிப் பார்த்துக் கொண்டே இருப்பது—அந்த விஷயம் ஒரு தடங்கலாக இன்று இருந்துகொண்டிருக்கிறது. கனம் கல்வி அமைச்சர் அவர்களும் ஒரு மன்றுடியார், அடியேனும் மன்றுடி, மன்றுடி மன்றுடி யாராகவே இருந்து வருகிறேன். (ஸ்ரீ வி. வி. ராமசாமி: வழக்கறிஞர் என்று சொல்வது இல்லையா ?) பழக்கத்தில் இருந்து நீங்கின அப்படிப்பட்ட வார்த்தைகளையெல்லாம் வேண்டாம் என்று நீக்கிவிடுவதற்குப் பல காரணங்கள் உண்டு. "அறம்" என்னும்போது அருக்கப்பட்ட அரமா, அல்லது செய்கின்ற அறமா என்று ஆராய்ந்து பார்த்து இரண்டில் ஒரு அர்த்தத்தைத் தூக்கித் தூரப்போட்டுவிடுகிறுன் தமிழன். அதற்குப் பலவிதமான காரணங்கள் உண்டு. அந்த ஆராய்ச்சிக்கு நாம் இப்பொழுது போகவேண்டாம். இன்றைக்கு நாம் கவனிக்கவேண்டியது தமிழில் ஏற்கனவே இருக்கிற அந்த உபயோகத்தை அப்படியே எடுத்துக்கொள்ளலாமா என்பதுதான். இது ஒரு சாதாரண விஷயம். ஆனுலும் இதற்கு ஆட்சேபணை வருவதற்குக் காரணம் என்ன, அந்நிய பாஷையிலிருந்து, அடுத்த ஒரு மொழியிலிருந்து எடுக்கப்பட்ட வார்த்தைகளுக்குக் கடன் வாங்குவது என்ற பெயர் இருக்கிறது என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். கடன் வாங்குவது என்பது பெயர் அளவில் இருக்கிறதே தவிர, வாஸ்தவமாகவே அவைகள் கடன் வாங்கிய வார்த்தைகள் அல்ல. அவைகள் சம்பாதித்த வார்த்தைகள். அவைகளை நாம் யாருக்காவது திரும்பக் கொடுக்கப் போகிறோமா ? இல்லை. ஆகவே அவை கடன் வாங்கிய வார்த்தைகள் அல்ல. அந்நிய வார்த்தைகளை ஏற்றுக் கொள்வதில் கேவலமும் ஆட்சேபணையும் இல்லை. அதற்காக ஒரு சிறிய உதாரணத்தையும் சொல்ல விரும்புகிறேன். 3-40 p.m.

தொல்காப்பிய காலத்தில் "ப்ரதிமை" என்ற பதம் "பதுமை" என்று மாற்றப்பட்டிருக்கிறது. அப்பொழுதே "பதுமை" என்ற வார்த்தையையே எடுத்துக் கையாண்டிருக்கிறுர்கள். அப்படிச் செய்வதற்கு அந்த நாளிலேயே தமிழனுக்குச் சுதந்திரம் இருக்கும் பட்சத்தில், இன்றைய தினம் "ஹாஸ்பிடல்" என்ற வார்த்தையை "ஆஸ்பத்திரி" என்று எடுத்துக்கொள்வதற்கு நமக்கு ஏன் சுதந்திரம் இல்லை என்று கேட்கிறேன். நமது பாட்டனுகிய தொல்காப்பியருக்கு இருந்த சுதந்திரம் அவரது வழிவழி வந்த நமக்கு இல்லையா ? ஏன் அதை ஆட்சேபிக்கவேண்டும் ? இப்படிப்பட்ட ஆட்சேபம் பொருத்தமில்லாத ஆட்சேபம். இந்த ஒரு விஷயத்தை மாத்திரம் நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுவோமானுல், நமது கல்வி அமைச்சர் அவர்களுடைய தலைமையின்கீழ், ஆணையின்கீழ் தயாரிக்கப்பட்ட, "க்ளாசரி ஆப் அட்மினிஸ்டிரேடிவ் டர்ம்ஸ்" என்ற புத்தகம் இன்றைக்கு இருக்கும் அளவில் பாதியாகக் குறைந்திருக்கப் பார்த்தது.

இன்றைக்கு நாம் பிற மொழிகளிலிருந்து எடுத்து உபயோகப்படுத்துகிற வார்த்தைகள் எவ்வளவோ இருக்கின்றன. அந்த வார்த்தையைப் போடுவதா அல்லது இந்த வார்த்தையைப் போடுவதா என்பதற்கு உண்ணுவிரதம் இருப்பதைவிட, "ரேடியோ" என்ற வார்த்தையை ஏன் போடக்கூடாது ? "ரேடியோ" என்பது தமிழ் வார்த்தை தானே. அந்த வார்த்தை யாருக்குச் சொந்தம் ? அந்த வார்த்தை ஆங்கிலேயர்களுக்கு மட்டும் சொந்தமா ? நடைமுறையில் இருக்கும் நல்ல வார்த்தை அல்லவா அது ? பெரும்பாலானவர்கள் உபயோகப்படுத்தும் வார்த்தையாச்சே அது ? மற்றும் இப்பொழுது உபயோகப்படுத்தவேண்டும் என்று சொல்கிற இரண்டு வார்த்தைகளும் தமிழ் வார்த்தைகள் அல்லவே. "வானெலி" என்பது தமிழ் வார்த்தை அல்ல. "ஆகாச வாணி" என்பதும் தமிழ் வார்த்தை அல்ல. "ரேடியோ" என்பதுதான் தமிழ் வார்த்தை. தமிழன் உபயோகப்படுத்திக்கொண்டே வாரத வார்த்தைகள் தமிழ் வார்த்தைகள்

[Sri S. T. Adityan] [14th February 1959

அல்ல. தமிழ் மக்களுடைய உபயோகத்தில் இருக்கக்கூடிய வார்த்தைகள் தான் தமிழ் வார்த்தைகள். இது ஒரு சிறு விஷயம். இதற்கு இன்றைக்கு ஆட்சேபணை சொல்வது பொருந்தாது.

இப்பொழுது "கலெக்டர்" என்ற வார்த்தைக்குத் தமிழ் பதம் கண்டு பிடித்திருக்கிறார்கள்; அதாவது "தண்டல்காரன்" என்று. அந்த வார்த்தையை ஒரு தமிழன் உச்சரிப்பதற்குக் கூடக் கஷ்டமாக இருக்கிறது. அது ஒரு புதிய வார்த்தை.

வார்த்தைகளை உபயோகப்படுத்த வேண்டியவன் யார்? அந்த வார்த்தைக்கு அதிகாரி யார்? "அபிடவிட்" என்ற வார்த்தைக்கு அதிகாரி யார் என்றால், வக்கீல் குமாஸ்தாதான். அவன் உபயோகிக்கிற வார்த்தையைத்தான் நாம் உபயோகிக்கவேண்டும். தோணி சம்பந்தப்பட்ட வார்த்தையை எடுத்துக்கொண்டால், கடற்கரையில் எந்த வார்த்தைகளை உபயோகிக்கிறார்களோ அந்த வார்த்தைகளைத்தான் நாம் உபயோகிக்க வேண்டும். அதை விட்டுவிட்டு இன்றைக்கு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு இந்த வார்த்தையைப் போடலாமா அல்லது அந்த வார்த்தையைப் போடலாமா என்று ஆராய்ச்சி செய்துகொண்டிருப்பதா?

மோட்டார் கார் சம்பந்தமாக என்ன வார்த்தையைப் போட வேண்டுமென்றால், என்னுடைய டிரைவர் உபயோகிக்கிற வார்த்தையைத்தான் போடவேண்டும். அவன்தான் அதற்கு அதிகாரி. அந்த வார்த்தையை உபயோகிக்கத் தெரிந்தவன் அவன்தான். அவன் சொல்லுகிற வார்த்தையை உபயோகிக்காமல், அதை விட்டுவிட்டு "ஷாக் அப்சார்பர்" என்ற வார்த்தைக்கு ஒரு புது வார்த்தையைக் கண்டுபிடிப்பது என்றால், அது உபயோகத்திற்கு அழகு அல்ல. அது பொருந்தாது. இன்றைக்கு அதனால் ஏற்படுவது இடைஞ்சல்தான். அதுதான் மூன்றாவது இடைஞ்சலாக இருக்கிறது என்று நான் ஏற்கனவே சொல்லியிருக்கிறேன்.

ஆகவே, முதலாவதாக யந்திர சாதனக் கருவி. அடுத்தபடியாக, ஷார்ட் ஹாண்ட் தேவையாக இருக்கிறது. ஷார்ட்ஹாண்ட் ரைட்டர்கள் போதிய அளவில் இல்லாமல் இருப்பது சர்க்கார் உத்தியோகங்களுக்கு இருக்கும் இரண்டாவது இடைஞ்சல். இப்பொழுது இருக்கக்கூடிய தமிழ் அறிஞர்கள் இன்றைக்கு இருக்கும் வார்த்தைகளை அப்படியே உபயோகிக்காமல் இடைஞ்சல் செய்வது மூன்றாவது. இந்த மூன்று இடைஞ்சல்களையும் நிவர்த்தி செய்துவிட்டால், ஏற்கனவே பெரியவர்கள் சொல்லி வைத்த பிரகாரம் "பழையன கழிதலைப்பற்றி" வருத்தப்பட வேண்டிய அவசியம் இல்லை, புதியன புகுதலைப்பற்றியும் வருத்தப்பட வேண்டிய அவசியம் இல்லை.

ஒன்றைக் கண்டு நாம் பெருமைப்பட வேண்டும். தமிழுக்கு எத்தனையோ அயல் வார்த்தைகளை உறிஞ்சி எடுத்துக்கொள்ளக்கூடிய சக்தி இருக்கிறது என்று சொன்னார்கள். அந்நிய வார்த்தைகளை அப்படித்தான் எடுத்திருக்கிறோம். சமஸ்கிருதத்திலிருந்து நாம் ஆயிரக்கணக்கான வார்த்தைகளை எடுத்துக்கொண்டிருக்கிறோம். இந்துஸ்தானியிலிருந்தும் பல வார்த்தைகளை எடுத்துக்கொண்டிருக்கிறோம். அவைகளில் சிலவற்றை இந்திக்காரர்கள் உபயோகிப்பதைவிட, நாம் ஜாஸ்தியாக உபயோகித்துக் கொண்டுவருகிறோம். "வகையறா" என்ற வார்த்தையைப் பாருங்கள். அதில் இரண்டு அரபு வார்த்தைகள் சேர்ந்திருக்கின்றன. இது அநேகருக்குத் தெரியாது. "தயாரித்தல்" என்ற வார்த்தையை எடுத்துக்கொண்டால், அது அந்நிய மொழியிலிருந்து பார்ஸி வழியாக வந்து ஹிந்தி, உருது வழியாகத் தமிழுக்கு வந்திருக்கிறது. "தயாரித்தல்" என்ற வார்த்தையைப் பார்சிக்காரர்கள் உபயோகித்த பிறகு, அது தமிழுக்கு வந்திருக்கிறது. அவர்கள் அதை வினைச் சொல்லாக உபயோகிப்பதில்லை. ஆனால், நாம் அப்படி உபயோகிக்கிறோம். அப்படி உபயோகித்த பிறகு, அதை நாம் விட்டுவிடலாமா? "பதில்" என்ற வார்த்தை உருதுவிலிருந்து வந்தது. அதற்குச் சரியான தமிழ் பதம் கண்டுபிடிப்பது என்றால் கஷ்டம். அதுவே ஒரு நல்ல தமிழ் வார்த்தையாக அமைந்திருக்கிறது. தேசிக

14th February 1959] [Sri S. T. Adityan]

விநாயகம் பிள்ளை அவர்கள் பாடல்களில் வரும் வார்த்தைகள் அவை. இப்படி அது கவி வரையிலும் வந்துவிட்டது. பாடல் பெற்ற ஸ்தலங்கள் என்று சொல்வதுபோல், அவைகளைப் பாடல் பெற்ற வார்த்தைகள் என்றும் சொல்லலாம். இப்படிப்பட்ட வார்த்தைகளைத் துருவித் துருவி ஆராய்ந்து பார்க்கக் கூடாது. அப்படிப்பட்ட வார்த்தைகள் தமிழுக்குத்தான் சொந் தம். இப்படிப்பட்ட எத்தனையோ வார்த்தைகளை நாம் கையாடி வரு கிறோம் என்பது மன்றாடியார் அவர்கட்கு (கனம் நிதி அமைச்சர் அவர் களைப் பார்த்து) நன்றாகத் தெரியும். (சிரிப்பு) "மோடிவ்" என்ற வார்த் தைக்கு "மோட்டிப்பு" என்று தமிழில் வந்திருக்கிறது. இப்படி ஆயிரக் கணக்கான பிற மொழி வார்த்தைகளைத் தமிழில் நாம் உபயோகப்படுத்திக் கொண்டு வருகிறோம். ஆகவே, இன்றைக்கு நாம் செய்ய வேண்டியது மூன்று விஷயங்கள். (1) யந்திரம், (2) ஷார்ட்ஹாண்ட், இவைகளைத் தவிர மூன்றாவதாகச் செய்ய வேண்டியது வார்த்தைகளை உபயோகிக்கிற தமிழனுக்கு மரியாதை கொடுக்க வேண்டும். மோட்டார் கார் சம்பந்தமாகச் சொன்னால், அதை உபயோகப்படுத்துகிற டிரைவரின் பாஷைக்குக் கொடுக்க வேண்டும். அப்படியே வக்கீல் குமாஸ்தா உபயோகப்படுத்துகிற வார்த்தை கட்கு மரியாதை கொடுக்கவேண்டும். அவன் தொழில் சம்பந்தமாக அவன் உபயோகப்படுத்துகிற வார்த்தைகளுக்கு இவற்றையெல்லாம் பண்டிதர்கள் கண்டவர்கள் அல்ல. நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு "நாம் எல்லா வற்றையும் கண்டுவிட்டோம்" என்று நினைத்துக் கொள்ளாமல் அந்தந்தத் துறையில் இருப்பவனுடைய பாஷைக்கு மதிப்புக் கொடுக்கவேண்டும். இப்படிப்பட்ட மூன்றாவது எண்ணத்தைக் கடைப் பிடித்தால், தானாகவே தமிழ் அரசாங்க பாஷையாக வந்துவிடும் என்று தெரிவித்துக்கொண்டு இன்று கொண்டுவந்திருக்கிற தீர்மானத்தை நான் ஆதரிக்கிறேன்.

* DR. A. CHIDAMBARANATHAN : தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானத்தை முன் மொழிந்த பிறகு அதை வழி மொழியும் அளவில் சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். இதை முன் மொழிந்த திருவாளர் முத்துக்கண்ணப்பன் அவர்கள் தமிழ் மொழி யானது எவ்வளவோ வளம் பெற்ற மொழி, ஆற்றல் வாய்ந்த மொழி, தகுதி வாய்ந்த மொழி என்று விவரித்து அறிவித்தார்கள். வளம் செறிந்த மொழி தமிழ்மொழி என்று யாவராலும் ஒப்புக்கொள்ளப் பட்ட செய்தியாகும். அன்றியும் அரசாங்கத்தின் ஆட்சி மொழியாகத் தமிழை ஆக்க வேண்டும் என்று இன்று தெரிவிப்பதாக இருந்தால், நிறையக் கூறவேண்டும். ஆனால், அது ஆட்சி மொழியாக ஆக்கப்பட்டு, விட்டது. முன் மொழிந்த திருவாளர் முத்துக்கண்ணப்பன் அவர்கள் விரும்புவதெல்லாம் இந்தச் சட்டப் பிரிவுகளின் கீழ் வரவேண்டிய சில அறிக்கைகள் தமிழிலேயே பிறப்பிக்க வேண்டும் என்பதுதான். அதை நான் வழி மொழிய விரும்புகிறேன். அதன்பொருட்டு ஒன்றிரண்டு வார்த் தைகளை மாத்திரம் சொல்ல ஆசைப்படுகிறேன்.

உறுப்பினர்கள் வினாக்களைத் தமிழிலேயே எழுதி அனுப்பினால், அவற் றைத் தமிழிலேயே அவை எழுதப்பட்ட விதமே வெளிப்படுத்தவேண்டு மென்றும், அல்லது அதற்கு மொழி பெயர்ப்புக் கொடுக்கும்போது அந்த வினாக்களைக் கொடுத்த உறுப்பினர்களைக் கலந்துகொண்டு அந்த மொழி பெயர்ப்பு சரிதானா என்று தெரிந்துகொண்டு வெளிப்படுத்த வேண்டு மென்றும், நிகழ்ச்சிக் குறிப்புகளிலும் அவற்றைச் சேர்த்துவிடவேண்டும் என்று சொல்வதும் முதல் செய்தி. 3-50 p.m.

இரண்டாவது செய்தி. இந்தத் தீர்மானத்தின் மொழி பெயர்ப்பைப் பார்க்கும்போது, ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்டிருப்ப தாகத் தெரிகிறது. இவ்வாறு மொழி பெயர்க்கப்படும்போது, நல்ல முறையில் மொழி பெயர்த்தல் நல்லது என்று குறிப்பிட விரும்புகிறேன். தக்க மொழி பெயர்ப்பாளர்கள் சிலர் இந்த அரசாங்கத்தாரால் நியமிக்கப்படவேண்டும். காட்டாக, இந்த மொழி பெயர்ப்பைப் பற்றிச் சில சொல்லுகிறேன். திரு. முத்துக்கண்ணப்பன் அவர்கள் இந்தத் தீர்மானத்தைத் தமிழில் இந்த முறையில் கொடுத்திருப்பார் என்று நம்ப முடியவில்லை. இந்தத்

தீர்மானமானது ஆங்கிலத்திலிருந்து தமிழிலே மொழி பெயர்க்கப்பட்டிருப்பதுபோல்தான் தோற்றுகிறது. மொழி பெயர்ப்பில் "ஷரத்துக்கள்" என்றிருக்கிறது. "பிரிவு" என்று மொழி பெயர்த்திருந்தால் நன்றாக இருக்கும். "விளம்பரங்கள்" என்றிருக்கிறது. "நோடிபிகேஷன்" என்பதற்கு "அறிக்கை" என்பதுதான் பொருத்தமாக இருக்கும். "விளம்பரம்" என்றால் "அட்வர்டிஸ்மெண்ட்" என்பதன் மொழி பெயர்ப்பே. ஆகவே, மொழி பெயர்ப்புக்குத் தக்க அறிவும், தகுதியும் ஆற்றலும் வாய்ந்தவர்களை நியமித்து செவ்வைபடச் செய்வது பொருத்தமானது என்று கருதுகிறேன். சில நேரங்களில் தமிழில் கேள்வி கேட்டால் கூட, ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தந்திருக்கிறார்கள். அதே போல், ஆங்கிலத்தில் கேட்ட கேள்விகளையும் தக்க மொழி பெயர்ப்பவர்களை வைத்து நல்ல முறையில் தமிழில் மொழி பெயர்க்கவேண்டும் என்று கூற விரும்புகிறேன். நாம் உறுதி மொழி எடுத்துக்கொள்ளும் உறுதி மொழிப் பத்திரத்தில் உள்ள ஆங்கில வாசகம் நல்ல முறையில், ஒழுங்காகத் தமிழில் மொழி பெயர்க்கப்படவில்லை என்பது என் கருத்து. காட்டாகச் சொல்வேன். "**I, A. Chidambaranathan solemnly affirm**" என்பது தமிழிலே "நான் அ. சிதம்பரநாதன்" என்றவாறு மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. அது "சிதம்பரநாதனாகிய நான் என்றவாறு இருக்க வேண்டும். இப்படி இருந்திருந்தால் நன்றாக இருந்திருக்கும். இவ்வாறு மொழி பெயர்ப்பதில் ஆற்றல் உள்ளவர்களை நியமிப்பதுபற்றிக் கட்டாயம் அரசினர் கவனம் செலுத்துவார்கள் என்று உறுதியாக நம்புகிறேன். அந்த வகையில் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்படி கேட்டுக்கொண்டு அமர்கிறேன்.

SRI A. M. ALLAPICHAI : Mr. Chairman, Sir, after a severe condemnation . . .

SRI MOHAMED RAZA KHAN : The hon. Member may speak in Tamil.

SRI A. M. ALLAPICHAI : To-day I will speak only in English.

SRI MOHAMED RAZA KHAN : Even otherwise, his Tamil is as good as mine.

* SRI A. M. ALLAPICHAI : All right. Sir, after a very severe condemnation of the Tamil Members here who speak in English, it is very difficult for me to speak. Really I was feeling nervous to speak in English. But I felt that to yield to pressure like this would be first-class cowardice. (Hear, hear.) The hon. Member Sri Adityan has done to-day a real service to Tamil language. (Hear, hear.) My hon. Friend, Vidwan Muthukannappan, if only he had seriously reflected over the implications of this Resolution, would have thought a hundred times over this matter before bringing in the Resolution which he did. Our State as it is to-day has a law by which Tamil language is the State language. Very many eminent men are our Ministers. It is not as if any one of us is wanting in our love for Tamil language. We are all Tamilians. Our mother tongue is Tamil. We have been brought up in Tamil culture, and we love the Tamil language. We speak Tamil at home. It is not as if we do not have any love for the Tamil language. Vidwan Muthukannappan's speech made a serious reflection that Tamilians who knew Tamil but spoke in English perhaps were wanting in patriotism and things like that.

14th February 1959] [Sri A. M. Allapichai]

That is not correct. My hon. Friend Vidwan Muthukannappan ought to realise that English-knowing Tamilians or English-knowing any other man may be as patriotic as, if not more patriotic than, purely Tamil-knowing gentlemen. As a matter of fact, great credit goes to all those Indian gentlemen who were great experts in English language and who were great masters of the English language, and who fought for the freedom of the country. If the freedom of the country is due to the efforts of any section of the Indian people, that section of the people was the English-knowing people who fought against the British and who used the English language against the British. Therefore, when we are talking in this House, we must be very careful to see that we do not cast any reflection either upon the patriotism of any person or upon his love for the Tamil language. Now, Sir, our Friend's object is to see that we all speak in Tamil language. No doubt, he has made certain exceptions. The exception applies to Dr. Mudaliar and then Sri P. T. Rajan, and Sri Raza Khan.

VIDWAN T. MUTHUKANNAPPAN : I am sorry, Sir, I have not exempted Sri P. T. Rajan. (Laughter.)

* SRI A. M. ALLAPICHAI : He has perhaps by implication exempted our lady Member who does not know Tamil. What I say is this. In this House almost all the speakers speak in Tamil. They reply in Tamil. I have spoken here in this House in Tamil. The only reason why I hesitate to speak in Tamil is this. Not that I do not know Tamil better than Sri Raza Khan. Definitely I know more than Sri Raza Khan and as good Tamil as any Member here. (Hear, hear.) What I feel is that when I speak in Tamil, it must be very correct Tamil. Not only correct Tamil, but while I speak in Tamil I must be in a position to speak as effectively as I do in the English language. Almost all the public meetings I address in Tamil. It is not difficult for me It is not because of any kind of inferiority complex or superiority complex. Language is only a vehicle of expression that we speak in a particular language. It is only a vehicle of thought to express oneself better. Such being the case, there is no meaning whatsoever in insisting upon people to speak only in Tamil. There are many implications in this Resolution. To-day Vidwan Muthukannappan has brought in this Resolution. Later on another Member may bring in a Resolution to the effect that whoever does not know Tamil should not become a Member of the Legislative Council. This is not correct. As I said earlier, the hon. Member Sri Adityan has rendered a good service to-day to Tamil language. His is a liberal way of doing things. What is the idea in saying 'Manradiar'? Any man in the street knows the term 'Vakil'. The term 'Vakil' is as good as 'Manradiar'. No doubt 'Manradiar' may be pure Tamil. Is not 'Vakil' a Tamil word? Whatever words we are using to-day are our own Tamil words. Sir, I will not be letting out a secret here when I say what happened some time before at the Presiding Officers' Conference. There was some discussion that everything must go on in Hindi.

Some of us expressed our inability to follow the proceedings. Somehow English was adopted. We spoke in English and others also spoke in English. What happened then was that we went to some place. There one gentleman in the course of his speech in Hindi said 'Pahat'. He freely used this word. At once, he corrected himself and said 'Parvat'. He thought it was a Urdu word. Even such a great man, who was a lover of Hindi, by force of habit, had to use that word. After some time, I asked some friends from which language the word 'Pahat' had come. They said that it was a pucca Hindi word. In that way, words have come to be used. One hon. Member pointed out the word 'Sharath' used in the Tamil language. How can we avoid the words in usage? Why should we cling on to very old words and
4 p.m. things in this atomic age? This is the Sputnik age. We cannot talk of past age. No doubt, we must have love for our language. It is all true. But there is no use of talking of the past and of the old things all the time. I want our Pandits to bear that in mind. In this age, we have to make advance after advance. We have to go a long distance. What is the use of getting ourselves confined to a particular thing? I have always said and I shall maintain now also that whatever foreign words we have used in the Tamil language, we can continue to use them if we can pronounce those words correctly and properly. Whether it is a foreign term or word, it is enough if we can pronounce it in our own language well. Then, it becomes our own word or term. Take, for instance, the word 'radio'. It is very well-known and it can be easily pronounced and people very well understand what it is. Such words, which we are using in our daily life, can be very well we used without being changed or translated into our own language. So, I say that this Resolution is not called for and is unnecessary. The question of language is very safe in the hands of our Government. They are doing very good service to the cause of Tamil language. No doubt, we have to encourage Tamil. But, we should know when to move, how to move, when to run, when not to run and all those things. We should not allow our enthusiasm to override other considerations. With these few words, I oppose the Resolution. Thank you, Sir.

* **Sri P. T. RAJAN :** கனம் தலைவர் அவர்களே, வித்துவான் முத்துக் கண்ணப்பன் பேசும்போது, என் பெயரையும் இழுத்துவிட்டார். அவசியம் இல்லாத நிலைமையில் இழுத்துவிட்டார். தமிழில் பேசினால் மட்டும்தான் தமிழன் என்று கருதப்படுவது தவறு என்று நான் சொன்னேன். தமிழில் பேசக் கூடாது என்று நான் சொல்லவில்லை. விதிவிலக்குக் கூடக் கொடுத்தார் டாக்டர் லக்ஷ்மணசுவாமி முதலியார் அவர்களுக்கு. எனக்கும் கொடுத்ததாக அங்கத்தினர்கள் நினைத்தார்கள். ஆனால், எனக்குக் கொடுக்கவில்லை. அதைப்பற்றி நான் அதிருப்திப்படவில்லை. தமிழிலேயே நடவடிக்கை நடக்கவேண்டுமென்று ஆங்கிலேயர்கள் இருந்த காலத்தில் கூட, திருச்சிராப்பள்ளி ஜில்லாவிலே பரீட்சார்த்தமாகத் தமிழில் நிர்வாகம் செய்யவேண்டுமென்று உத்தரவு போட்டார்கள் என்று நினைக்கிறேன். (கனம் ஸ்ரீ சி. சுப்பிரமணியம் : ஆங்கிலேயர்களுக்குப் பின்னால் தான்) பிசகாகச் சொன்னதை நான் வாபஸ் வாங்குகிறேன். **I stand corrected.** ஆனால் அந்தக் காரியம் சரிவர நடைபெறவில்லை என்று மறுபடியும் ஆங்கிலத்திலேயே நடத்தும்படியாக

14th February 1959]     [Sri P. T. Rajan]

உத்தரவு போட்டார்கள் என்று நினைக்கிறேன். அதுவும் சரியோ இல்லையோ? (கனம் ஸ்ரீ சி. சுப்பிரமணியம் : இல்லை) ஆனால், இப்போது அரசியலாரே வேண்டிய அளவு தமிழில் எல்லாக் காரியங்களும் நடைபெறவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். உடனேயே எல்லாவற்றையும் செய்துவிடவேண்டுமென்று சொன்னால், தமிழிலே நன்றாக எழுதக்கூடிய, உத்தரவு போடக் கூடியவர்கள் உத்தியோகத்தில் இருக்கிறார்களா என்று பார்க்கவேண்டும். ஒரு வார்த்தைக்கு இன்னொரு வார்த்தை போட்டுவிட்டால், அர்த்தமே மாறிப்போய்விடும். இங்கே பேசுகிறவர்கள் தமிழில் பேசட்டும். என் போன்றவர்கள் தமிழில் பேசவில்லை என்று சொன்னால், கனம் அங்கத்தினர் ஸ்ரீ அல்லாபிச்சை சொன்னது போல, எந்த பாஷையில் தப்பிதம் இல்லாமல் குறைந்த தப்பிதத்தில் பேச முடியும் என்று எங்களுக்கே நம்பிக்கை இருக்கிறதோ, அந்த பாஷையில் தான் பேசவேண்டியிருக்கிறது. அதனால் தமிழுக்கே நான் விரோதியல்ல.

தமிழிலே நமது வித்வான் அவர்கள் அழகாகப் பேசினார்கள். ஆனால், தமிழில் பேசுகிறபோது, சாதாரண மக்களுக்கும் கூடப் புரியக்கூடிய அளவில் பேச வேண்டுமே தவிர, தம்முடைய கெட்டிக்காரத்தனத்தை, பிறத்தியார் தம்மைக் கெட்டிக்காரன்—படித்தவன் என்று கருதவேண்டும்—நினைக்கவேண்டும்—என்கிற அளவில் பேசக்கூடாதென்பது என் கருத்து. அநேகமாகத் தமிழில் பேசுகிறவர்கள் தம் புலமையை, கெட்டிக்காரத்தனத்தைப் பிறர் பாராட்டவேண்டும் என்று பேசுகிறார்களேயொழிய, மக்களுக்குத் தம் மனதில் உள்ளதை உள்ளபடியே எப்படி எடுத்துச் சொல்வது என்று கொஞ்சங்கூடச் சிந்தனை பண்ணுவது இல்லை. வித்வான் முத்துக்கண்ணப்பன் பேசும்போது கூட, கேட்பதற்கு இனிமையாக இருந்தது. ஆனால், எல்லா மக்களும் அறியக்கூடுமா என்பது சந்தேகம். அவர்களைப் போல மற்றவர்களால் பேச முடியவில்லை என்பதற்காக மற்றவர்கள் தமிழர்கள் அல்ல என்று சொல்லக்கூடாதென்று நான் கேட்டுக்கொள்கிறேன். தமிழில் பேசினால் மட்டும் போதும், தமிழனுக்குரிய வாயக்கு, பண்பு, யோக்கியதை எல்லாம் வந்துவிடுகின்றன என்றால், நான் அதை ஒத்துக்கொள்ள முடியாது. ஆகையால், வித்வான் முத்துக்கண்ணப்பன் சொல்கின்றது ஒன்றும் அரசியல்படி உடனே வந்துவிடாது. பேசுகின்றவர்கள் தமிழில் பேச வேண்டும். ஆனால், அவர் பேசுகின்றபோது பிறத்தியார் அறியும் அளவில் பேச வேண்டும். அந்தக் காலத்தில் உபயோகத்திலிருந்த வார்த்தைகளில் பேசிப் புரியாமல் செய்யக்கூடாதென்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

(Sri A. Gajapathy Nayagar rose . . .)

MR. CHAIRMAN : The hon. Member is the last Speaker Let him finish in about five minutes.

* SRI A. GAJAPATHY NAYAGAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தத் தீர்மானத்தில் வித்வான் முத்துக்கண்ணப்பன்

" This council recommends to the Government . . . that the business of the Legislature be transacted in Tamil .

என்று மட்டுந்தான் குறிப்பிட்டிருக்கிறார். இந்தச் சபையில் மொழி ஆராய்ச்சி செய்ய வரவில்லை. சொல் ஆராய்ச்சி செய்யவும் சொல்லவில்லை. எல்லோரும் தமிழில்தான் பேச வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளவில்லை. இந்தத் தீர்மானப்படி சட்டப் பேரவையின் அலுவல்கள் எல்லாம் அரசாங்க மொழியான தமிழில் நடக்கவேண்டும் என்றுதான் கோருகிறார். இப்போதும் சட்டப் பேரவையின் அலுவல்களில் சில பகுதிகள் தமிழில் நடக்கின்றன. வினாவிடை தமிழில் வருகிறது. ஆனாலும் அந்த இடத்திலிருந்து—கனம் சேர்மன்—தாங்கள் சொல்கின்றவைகளும் கூடத் தமிழில் வர வேண்டும் என்பது பேரவா. ஆங்கிலத்தில் எழுதுகிற நடவடிக்கைகளை மொழி பெயர்த்து அப்படியே தமிழில் அங்கேயிருந்து வா வேண்டும் என்பதுதான் தீர்மானத்தின் கோரிக்கை. மற்றப்படி ஆங்கிலத்தில் பேசலாம். நானும் ஆங்கிலத்தில்

பேசுகின்றேன். கட்டாயம் இல்லை. அரசாங்க மொழி தமிழ் என்பது ஒப்புக் கொள்ளப்பட்டுவிட்டது. இந்தத் தீர்மானத்தின் மீது அரசாங்க மொழியாகிய தமிழைப் பெருமைப்படுத்தியோ, சிறுமைப்படுத்தியோ பேச வேண்டியதில்லை. இங்கே கேட்டுக்கொள்வது எல்லாம் கனம் ஐயா அவர்கள் சொல்லுகிற உத்தரவுகள், அறிக்கைகள் எல்லாம் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுச் சொல்லப்பட வேண்டும் என்பதுதான். எப்போது தமிழ் அரசாங்க மொழியாக ஆகிவிட்டதோ, அப்போது மேலிருந்து கீழே வருகிற வரைக்கும் எல்லாம் தமிழில் வர வேண்டும் அதற்கான முயற்சியை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டு தீர்மானத்தை நான் ஆமோதிக்கிறேன்.

4-10 p.m. (Sri K. T. Kosalram rose . . . .)

MR. CHAIRMAN: There is no time please. There is a similar resolution. If the hon. Member wants he can speak on it. Anyway he may speak for two minutes.

*SRI K. T. KOSALRAM: மதிப்பிற்குரிய சபைத் தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானத்தால் மிகவும் பிரயோஜனம் ஏற்பட்டிருக்கிறது என்றுதான் நான் கருதுகிறேன். கனம் நண்பர்கள் ஸ்ரீ ஆதித்தன் அவர்களும் ஸ்ரீ பி. டி. ராஜன் அவர்களும் இந்த விவாதத்தில் கலந்துகொண்டதற்காக நான் அவர்களைப் பாராட்டுகிறேன். "ஆகாஷ்வாணி" என்பதும் "வானொலி" என்பதும் தமிழ் அல்ல என்றும் ரேடியோ என்பது தான் தமிழ் என்றும் ஸ்ரீ ஆதித்தன் சொன்னார். உண்மையை அப்படியே எடுத்துச் சொன்னதற்காக நான் அவரைப் பாராட்டுகிறேன். அவர் ஆதரவளிப்பதாகச் சொல்லும் கட்சியினர் இதை ஒத்துக்கொள்ள வேண்டும் என்பது என் ஆசை.

அடுத்தபடியாக, கனம் நண்பர்கள் வித்வான் முத்துக்கண்ணப்பன் அவர்களுக்கும், ஸ்ரீ கஜபதி நாயகர் அவர்களுக்கும் சில விஷயங்கள் சொல்ல விரும்புகிறேன். இந்த நாட்டில் நான் இரண்டு வெறிகளைப் பார்க்கிறேன். ஒன்று, ஹிந்தி வெறி, மற்றொன்று தமிழ் வெறி. இந்த இரண்டு வெறிகளும் நாட்டில் இருக்கக் கூடாது என்றுதான் உண்மையான தமிழ்ப் பற்று உள்ளவன் நினைப்பான். அவர்கள் நினைக்கின்ற தமிழ் நாடாக இருந்தாலும் சரி, நான் நினைக்கிற பாரத நாடாக இருந்தாலும் சரி, வெறி என்பது நாட்டிற்குத் துரோகம்தான் விளைவிக்கும். "ஊர்தி நிலையம்" என்று பஸ் ஸ்டாண்டுகளைச் சொல்லுகிறார்கள். பஸ் ஸ்டாண்டு என்று சொன்னால், அறிவாளியும் சரி, கிராம மகனும் சரி எல்லோரும் புரிந்துகொள்கிறார்கள். தமிழ் கலைக் களஞ்சியம், தமிழ் ஆட்சிச் சொல் அகராதி போன்றவைகளைத் தயாரிக்கும் கழகங்களில் தமிழ் வெறியைக் காண்பிக்கக்கூடியவர்கள் அங்கத்தினர்களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியவந்தது.

டாக்டர் சிதம்பரநாதன் செட்டியார் அவர்கள் ஒரு சில கருத்துக்களைத் தெரிவித்தார்கள். அவர் பெரிய தமிழ்ப் புலவர், தமிழில் மேதை. அவர் போன்று தமிழ் வெறியற்றவர்கள் இந்த நாட்டில் இருக்க வேண்டும். தமிழ் வெறியைக் கிளப்புபவர்கள் இந்த நாட்டிலுள்ள முதலாளிகள்தான். அவர்கள் மொழி, மொழி என்ற பெயரால் மக்களை ஏமாற்ற நினைக்கிறார்கள் என்பதைக் கனம் அங்கத்தினர் வித்வான் முத்துக்கண்ணப்பன் புரிந்துகொள்ளவேண்டும். மொழி என்ற பெயரால் நாட்டு மக்களை ஏமாற்றுகிறார்கள் இவர்கள். அத்துடன் அரசுரிமை என்ற பெயராலும் நாட்டு மக்களை ஏமாற்றுகிறார்கள். பழைய தமிழ் முடியரசில் மக்கள் எப்படி இருந்தார்கள் என்பதைப் பார்க்க வேண்டும். நமது பழைய பண்பாட்டைப்பற்றிப் பேச வேண்டாம் என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஆதித்தன் சொன்னார். பழைய காலத்தில், முட்டுக்குக் கீழே வேஷ்டி உடுத்தினால், கழுத்தை அறுத்து விடுவார்கள் மகாராஜ

14th February 1959] [Sri K. T. Kosalram]

ஜாக்கள். மேல்த் துண்டு போடுபவர்களே மகாராஜாக்கள் என்ன செய்திருக்கிறார்கள் என்பதைச் சரித்திரத்தைப் படித்துத் தெரிந்துகொள்ளுங்கள். பழையன வேண்டாம், புதியன புகுவோம் என்று சொல்ல விரும்புகிறேன். ஸ்ரீ பி. டி. ராஜன், டாக்டர் லக்ஷ்மணஸ்வாமி முதலியார் முதலிய எல்லோருக்கும் தமிழ்ப் பற்று உண்டு. இந்தத் தேசம் முழுவதும் ஒன்றாக இருக்க வேண்டுமென்று சொல்கிறோம். தமிழ், தமிழ் என்று சொல்லி ஆங்கிலத்தின் மீது வெறுப்பை ஏற்படுத்திக்கொண்டு கிணற்றுக்குள்ளே இருக்க வேண்டாம். அதைத் தமிழ் ஆதரவாளர்களிடம் விட்டுவிடுவோம் என்று சொல்லிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானம் அவசியமில்லை என்பது என் கருத்து. ஏனென்றால், தமிழும் ஆட்சி மொழியாக ஆக வேண்டுமென்று சட்டமியற்றியிருக்கிறோம். சட்டமியற்றுவது என்பது ஒரு விஷயம்; அதை நடைமுறைக்குக் கொண்டுவருவது என்பது வேறு விஷயம்; இரண்டுக்கும் வித்தியாசங்கள் இருக்கின்றன. நடைமுறைக்குக் கொண்டுவருவதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. இப்போது நாம் மலையின் உச்சியில் இருக்கிறோம். மலை உச்சியிலிருந்து கீழே இறங்கிவர வேண்டுமென்று நினைக்கிறோம். கீழே இறங்கவும் ஆரம்பிக்கிறோம். ஆனால், படிப்படியாக இறங்கினால்தான் பத்திரமாகக் கீழே வந்துசேர முடியும். உடனடியாகக் கீழே போய்ச் சேர வேண்டுமென்று அவசரப்பட்டாலோ ஆத்திரப்பட்டாலோ, ஆளே கீழே போய்ச் சேர முடியாது.

SRI MOHAMED RAZA KHAN : ஆஸ்பத்திரிக்குப் போவோம்.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆஸ்பத்திரிக்கு அல்ல, வேறு இடத்திற்குப் போவோம். எந்தக் காரியமும் இந்த நிலைக்கு வந்துவிடக் கூடாது என்பதைத்தான் வலியுறுத்துகிறேன். ஆட்சி மொழி தமிழ் என்று சட்டப் பிரகாரம் தீர்மானித்துவிட்டோம். தமிழை ஆட்சி மொழியாக எவ்வாறு படிப்படியாகக் கொண்டுவருவது என்பதுபற்றிப்-படிப்படியாக எவ்வாறு ஏற வேண்டும், அல்லது எவ்வாறு படிப்படியாக இறங்க வேண்டும் என்பதுபற்றி ஆலோசிக்க ஒரு குழுவும் நியமிக்கப்பட்டிருக்கிறது. அந்தக் குழு ஒவ்வொரு விஷயத்தையும் ஆராய்ந்து பார்த்து வருகிறது. உரிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. கனம் அங்கத்தினர்களுக்குத் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன். 1,000 ஆபீஸ்களில் தமிழ் மொழியை உபயோகிக்க வேண்டும் என்று சமீபத்தில்தான் உத்தரவு போடப்பட்டிருக்கிறது. மற்ற ஆபீஸ்களிலும் தமிழையே உபயோகிக்க வேண்டுமென்றால், கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஆதித்தன் அவர்கள் கூறியதுபோல், இப்போது அதற்குப் பல தடைகள் இருக்கின்றன. முதலில் தமிழ் டைப்ரைட்டர்கள் வேண்டியிருக்கின்றன. இப்போதுதான், தமிழ் டைப்ரைட்டர்களில் எழுத்துக்கள் எவ்வாறு அமைக்கப்பட வேண்டும் என்பதுபற்றி, ஆராய்ச்சி செய்த பிறகு முடிவு செய்யப்பட்டிருப்பதுடன், அந்த முடிவுப் பிரகாரம் புதிய டைப்ரைட்டர்களைச் செய்யவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இப்போதுதான் 100 இயந்திரங்கள் வந்து சேர்ந்திருக்கின்றன. அவைகள் இன்னும் ஆயிரக் கணக்கில் வேண்டியிருக்கின்றன. இயந்திரங்கள் இருந்தால் மட்டும் போதாது. இயந்திரங்களை உபயோகிப்பவர்களுக்கு அவைகளில் பழக்கமும் வேண்டும். இப்போதுதான் அவர்களுக்கு அந்த இயந்திரங்களில் பயிற்சி கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். இப்போது 600 பேருக்குப் பயிற்சி கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டு பயிற்சியும் கொடுக்கப்பட்டு வருகிறது. இந்த ஏற்பாட்டை விரிவாக்க வேண்டுமானால், பிறகு விரிவாக்கலாம். இருந்தாலும், இந்த இயந்திரங்களை உபயோகிக்க வேண்டுமென்றால், இவர்களுடைய பயிற்சி முடிய வேண்டும், இயந்திரங்கள் வந்துசேர வேண்டும். இரண்டாவது, தமிழ் சுருக்கெழுத்து. அது எல்லோருக்கும் தெரிந்திருந்தால்தான், இப்போது ஆங்கிலத்தில் நடவடிக்கைகளை எவ்வளவு

நன்றாகச் செய்ய முடிகிறதோ அவ்வளவு நன்றாகத் தமிழிலும் செய்ய முடியும். ஏராளமான சுருக்கெழுத்தாளர்களைப் பெறுவதற்கும் இன்று பல முயற்சிகளைச் செய்து வருகிறோம். இவைகளெல்லாம் தமிழ் ஆட்சி மொழிச் சட்டத்தை அமல் நடத்துவதற்கு உபகரணங்களாக இருக்கின்றன. மேலும், ஆட்சி மொழியாவதற்கு, தமிழ் மொழியே பல வகைகளில் வளர்ச்சியடைய வேண்டியிருக்கிறது என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். தமிழ் நல்ல வளம் பொருந்திய மொழி என்பதை எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. மற்ற மொழிகள் எல்லாம் வளராமல் இருந்த காலத்திலேயே தமிழ் வளம் பெற்றிருந்தது. ஆனால், நாம் அடிமைப்பட்டிருந்த காலத்தில் அந்த வளம், வளர்ச்சி, ஓரளவு தடைப்பட்டு நின்றுபோய்விட்டது. இன்று நவீனக் கருத்துக்களைத் தமிழில் எடுத்துச் சொல்ல முடியாததற்குக் காரணம் அதுதான். மத்தியில் நமது தமிழ்ச் சிந்தனை துண்டிக்கப்பட்டு விட்டது. அன்று பல கருத்துக்களைத் தமிழில் நினைக்கவில்லை. எனவே, அந்தக் கருத்துக்களைத் தெரிவிப்பதற்கு சரியான தமிழ்ப் பதங்கள் இன்று இல்லை. அவைகளுக்குச் சரியான தமிழ்ப் பதங்கள் வேண்டுமானால், அதற்குச் சிலப்பதிகாரத்தையும், தொல்காப்பியத்தையும், மணிமேகலையையும் பாருங்கள் என்று சொன்னால், அது சரியான யோசனை என்று சொல்வதற்கில்லை. மனிதனின் வளர்ச்சியிலும் முன்னேற்றத்திலும் எல்லாத் துறைகளிலும் புதிய புதிய கருத்துக்கள் அவனுக்குத் தோன்றியிருக்கின்றன. விஞ்ஞானம் போன்ற துறைகளில், பல கருத்துக்களுக்குத் தகுந்த பதங்கள் தமிழில் ஏற்படவில்லை. அப்படியிருக்க, அவைகளுக்குப் பழைய தமிழ் இலக்கியங்களைப் பார்ப்பது, ‘இருட்டு வீட்டில் இல்லாத ஒன்றைக் கண்ணை மூடிக்கொண்டு தொடுவதைப்’ போன்றது என்று சொல்லலாம். பொருத்தமாக இல்லாத பழைய பதங்களைக்கொண்டு புதிய கருத்துக்களைத் தெரிவிக்க முடியாது. ஆகையால், புதிய பதங்களை அமைக்கும்போது, அவைகளைத் தகுந்த முறையில் அமைக்க வேண்டும். ஏன் அவைகளை அவ்வாறு அமைக்க வேண்டும் என்று சொல்கிறோம்? இப்போது ஒருசிலர் தமிழில் பேசும்போது, அவர்கள் பேசுவது ஒரு சிலருக்குத் தான் புரிகிறது. அவர்கள் பேசுவது மற்ற 99 சதவிகிதத்தினருக்குப் புரியவில்லை. ஆகவே, நாம் ஆட்சி மொழியாக ஏற்றுக்கொள்ளும் தமிழ் மொழி எல்லோருக்கும் புரியக்கூடிய மொழியாக இருக்க வேண்டும் என்பது மிகவும் முக்கியம். இப்போது ஆங்கிலம் தெரியாத மக்கள் ஆங்கிலத்தில் போடப்படும் உத்தரவைப் புரிந்துகொள்ள முடியாமல் அதை எடுத்துக்கொண்டு ஆங்கிலம் படித்தவர்களிடம் செல்கிறார்கள். தமிழ் ஆட்சி மொழியாக வந்தால், அந்த நிலைமை இருக்கக் கூடாது. தமிழ் ஆட்சி மொழியாக வந்த பிறகு, அரசாங்க உத்தரவுகளிலும் அரசாங்கக் கடிதங்களிலும் எழுதப்படும் தமிழ் சாதாரண மக்களுக்குப் புரியாமல் அவர்கள்—நான் படிக்காதவர்களைப் பற்றிச் சொல்லவில்லை, சாதாரண அளவிற்குப் படித்தவர்களைப்பற்றிச் சொல்கிறேன்—பண்டிதர்களிடம் சென்று அர்த்தம் கேட்க வேண்டிய நிலைமை இருக்குமேயானால், தமிழ் ஆட்சிமொழியாக வந்து என்ன பிரயோஜனம்? சாதாரண அளவிற்குப் படித்தவர்கள் புரிந்துகொள்ளக்கூடியவாறு நமது ஆட்சி மொழித் தமிழ் அமைய வேண்டியது மிகவும் முக்கியம்.

4-20 p.m. ஆகவே. இன்று உபயோகத்தில் இருக்கும் பதங்களைப் போடுவதா அல்லது வேறு பதங்களைப் போடுவதா என்பது குறித்து சச்சரவு வேண்டியதில்லை. பல பதங்கள் தானாகவே அமைந்துவிடுகின்றன. இன்று பல பதங்கள் தமிழ் மயமாகிவிட்டதினால், அவைகள் தமிழாகவே காட்சி அளிக்கின்றன. ஆகவே, அவைகளை உபயோகிப்பதில் கஷ்டம் ஒன்றும் இருக்காது. அதற்காக நாம் எந்தவிதமான முயற்சியும் எடுக்கவில்லை என்று அர்த்தமல்ல. வெறும் பதங்களை அமைத்துவிடுவது மட்டும் போதாது. அது சுலபமான விஷயந்தான். இன்று ஆங்கிலத்தில் இருக்கக்கூடிய ஒரு முக்கியமான சிறப்பு என்னவென்றால், நிர்வாகத்திலும் சரி அல்லது நீதி மன்றங்களிலும் சரி, ஒவ்வொரு பதத்திற்கும் இன்னதுதான் அர்த்தம் என்று வரையறுத்துச் சொல்லும் முறையில் ஆங்கிலப் பதங்கள் அமைந்திருக்கின்றன. ஒரு பதத்தை உபயோகித்தால், அதற்கு இன்னதுதான் அர்த்தம் என்று சொல்லிவிடலாம். ஆகவே, ஒரு உத்தரவு போடும்போது அல்லது

14th February 1959] [Sri C. Subramaniam]

ஒரு பதத்தை உபயோகப்படுத்தும்போது, இதற்கு இன்னதுதான் அர்த்தம் என்று நமக்குத் தோன்றலாம், இதைத் தவிர வேறு ஒரு அர்த்தம் இதற்கு இருக்க முடியாது என்று நமக்குத் தோன்றலாம். ஆனால் அதேபோல் அதற்கு. வேறு ஒரு அர்த்தத்தை வேறு சிலர் எடுத்துக்கொள்ளலாம், அப்படி ஒவ்வொருவரும் ஒவ்வொரு அர்த்தம் செய்துகொண்டால், அப்படிப்பட்ட பதங்களை உபயோகிப்பதால் அனர்த்தம்தான் விளையும், அதனால் கேடுகள்தான் நேரிடும். ஆகவே, இதுதான் நம் குறுக்கே நிற்கிறது. எல்லா உத்தரவுகளையும், எல்லா அறிக்கைகளையும், எல்லாக் கருத்துக்களையும் தமிழில் சொல்ல வேண்டுமென்று சொல்லும்போது, அதிலுள்ள கஷ்டங்களை உணர வேண்டும். இத்தீர்மானத்தை ஒத்துக்கொள்வதில் கஷ்டமொன்றும் இருக்காது. ஆனால், உடனடியாக நாளையே சட்டங்கள் போன்றவைகளைத் தமிழில் கொண்டுவரவேண்டுமென்று சொன்னால், அது எவ்வளவு தூரம் முடியும் என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். பதங்களை உபயோகிக்கும்போது, எல்லோரும் அவைகளுக்கு ஒரே அர்த்தம் கொடுக்கக்கூடிய அளவிற்கு இன்று தமிழ் வளர்ந்திருக்கிறதா என்று பார்த்தால், அந்த அளவிற்குத் தமிழ் இன்னும் வரவில்லை. ஆனால், பதங்கள் பழக்கத்திற்கு வரும்போது, அது தானாகவே ஏற்படும். ஆங்கிலத்தோடு தமிழையும் மத்தியில் உபயோகப்படுத்தும்போது, எந்த ஆங்கிலப் பதத்தோடு எந்தத் தமிழ் பதத்தை உபயோகப்படுத்தலாம் என்று பார்த்து, அதை இணைத்து இணைத்து உபயோகப்படுத்தும்போது, அதற்குள்ள அர்த்தம் தானாகவே வரையறுக்கப்படும். அப்பொழுது இதற்கு இன்ன அர்த்தம்தான் என்று சொல்ல முடியும். ஆகவே, படிப்படியாகச் செல்ல வேண்டுமே தவிர, உடனடியாக எல்லாம் தமிழில்தான் நடக்க வேண்டுமென்று உணர்ச்சிவசப்பட்டுச் சொல்லும்போது, வெறி என்று சொல்ல வேண்டியதில்லை, உணர்ச்சி கூட தவறான வழியில் நம்மைச் செலுத்திக்கொண்டு போய்விடும். உணர்ச்சிவசப்பட்டு நாம் காரியங்கள் செய்வோமானால், உணர்ச்சிவசப்பட்டு நடவடிக்கைகள் எடுத்தால், அது ஓரளவிற்கு நமக்குப் பெரும் பாதகத்தை விளைவிக்கும், அதனால் படிப்படியாக இன்று பல காரியங்களைச் செய்வதற்கு "இம்பிளிமெண்டேஷன் கமிட்டி" போட்டு, அவர்கள் ஒரு திட்டம் வகுத்துக்கொண்டு திட்ட அடிப்படையில் நடவடிக்கைகள் எடுத்து வருகிறார்கள். ஆகவே, வித்வான் முத்துக்கண்ணப்பன் அவர்களுக்கு நான் சொல்லிக்கொள்கிறேன், வேண்டிய நடவடிக்கைகள் எல்லாம் எடுக்கப்பட்டு வருகின்றன. அந்தந்த சமயம் வரும்போது, நல்ல பக்குவம் ஏற்படும்போது, எந்தெந்த விஷயங்களில் தமிழை உபயோகப்படுத்த முடியும் என்பதுபற்றி ஆராய்ந்து பார்த்து, நல்ல முறையில் முடிவு செய்து அதற்கேற்ப இந்தச் சட்டத்தின் கீழ் அறிக்கைகள் பிறப்பிக்கப்படும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே, இந்தத் தீர்மானத்தை வற்புறுத்தாமல், இதை வாபஸ் பெற வேண்டுமென்று வித்வான் முத்துக்கண்ணப்பன் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

* **VIDWAN T. MUTHUKANNAPPAN**: மன்றத் தலைவர் அவர்களே, அறிவுமிக்க கனம் கல்வியமைச்சர் அவர்கள் மிக அழகாக விளக்கினார்கள். என் உள்ளத்தில் இருக்கிறதைத்தான் கூறினார்கள். அவர்களும், அரசாங்கமும் தமிழ் மொழி ஆட்சிமொழியாகிவிட்ட பிறகு, அதை இச்சபை மொழியாக ஆக்க வேண்டுமென்பதற்காக எவ்வளவு தூரம் சிறந்த முறையில் நடவடிக்கைகள் எடுத்து வருகிறார்கள் என்பதை நான் அறியாமல் இல்லை. அவர்கள் சொன்ன சங்கடங்கள் எல்லாம் எனக்குத் தெரியும். இறுதியாக ஒன்றிரண்டு செய்திகளைக் குறிப்பிட்டுவிட்டு அவர் சொன்ன விளக்கத்திற்கு வருகிறேன்.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ அல்லாபிச்சை அவர்கள் ஆங்கிலத்தில் சில குறிப்பிட்டார்கள். உங்களுக்கெல்லாம் புதுமையாக இருக்கும் ஒரு செய்தியை நான் சொல்ல விரும்புகிறேன். அவரும் நானும் ஒரே ஆசிரியரிடம் ஒரே கல்விக் கூடத்தில் தமிழ் பயின்றவர்கள். அவரைத் தவிர மற்ற எல்லோரும் தமிழில் பேசினார்கள். அவரும் தமிழில் பேசவில்லையே என்பது தான் எனக்கு வருத்தம்.

[14th February 1959

SRI A. M. ALLAPICHAI : அங்கத்தினர் இன்றைய தினம் ஆங்கிலத்தில் பேசுபவர்களைக் கண்டிக்காமல் இருந்திருந்தால், நானும் தமிழிலேயே பேசியிருப்பேன்.

* VIDWAN T. MUTHUKANNAPPAN : தமிழில் பேசினால் தவறு வந்துவிடுமே என்ற சந்தேகத்தின் பேரில், அவர்கள் தமிழில் பேசவில்லை யென்று நினைக்கிறேன். அவர்கள் தமிழில் பேசினால் ஆங்கிலத்தில் பேசுவதை விட மிக நன்றாகப் பேசுவார்கள் என்று உறுதியாகக் கூற முடியும். அடுத்தபடியாக, அறிவு சான்ற உயர் திரு. ராஜன் அவர்கள் ஒன்று குறிப்பிட்டார்கள். நான் இனிய தமிழில் பேசுகிறேன் என்றும் ஆனால் நான் பேசுவது சிலருக்குப் புரியாது என்றும் குறிப்பிட்டார்கள். நல்லகாலமாகச் "சிலருக்கு" என்றுதான் குறிப்பிட்டார்கள். தமிழ் படித்த அனைவருக்கும், தமிழ் நாட்டில் உள்ள அனைவருக்கும் நான் பேசும் தமிழ் நன்கு புரியும் என்றுதான் நான் நினைக்கிறேன். நான் பாமர மக்களிடம் அதிகம் பழகுபவன். நான் பேசும் தமிழ் சாதாரணத் தமிழ்தான்; கொச்சை யில்லாதது ; அவ்வளவுதான். ஆனால் கனம் அங்கத்தினர் திரு. பி. டி. ராஜன் அவர்கள் சொன்னதுபற்றி நான் வருந்துகிறேன். அங்கத்தினர் அவர்கள், "தமிழ வேள்", மதுரைத் தமிழ் சங்கத்தின் தலைவர். ஆகவே, நான் சொல்வது அவருக்குப் புரியவில்லை யென்று அவர் சொன்னால் அது வருந்தத்தக்க விஷயமே.

அடுத்தபடியாக, திரு. ஆதித்தன் அவர்களும் உயர் திரு. கோசல்ராம் அவர்களும் எனது கருத்தையே பிரதிபலித்தார்கள். உண்மையிலேயே, இதற்கென்று தோண்டித் தோண்டி, கல்லிக் கல்லி புதிய புதிய பதங்களை, செத்து மடிந்து புதைந்து கிடக்கிற பதங்களைக் கையாள வேண்டுமென்று சொல்பவன் அல்ல நான். இன்று மக்களிடையே எந்தவிதமான வார்த்தைகள் அல்லது பதங்கள் பழக்கத்தில் இருந்துவருகின்றனவோ அவைகள்தான் வர வேண்டும். அதுதான் தமிழ் வளர உதவக் கூடும். வீணாக வரிந்து புதிய பதங்களைத் திணிப்பது தமிழைக் கொலை செய்வதாகும் என்பதுதான் என் கருத்து.

தமிழ் வெறி பிடித்தவர்களினால்தான் இந்நாட்டில் மகத்தான தவறுகள் ஏற்படுகின்றன என்பது எனக்குத் தெரியும். தமிழ் மட்டும் அரைகுறையாகக்கற்று தமிழ் தவிர வேறு மொழி அறியாத, தமிழ்-தமிழ் எல்லாம் தமிழில் இருக்கின்றன என்று அசட்டு வாதம் செய்யும் பதர்களினால்தான் தமிழ் நாட்டிற்குக் கேடு விளைகிறது என்பதும் எனக்குத் தெரியும். எனக்கு மூன்று, நான்கு மொழிகள் தெரியும். பல மொழிகளையும் கற்றபின்தான் தமிழின் பெருமையை நன்கு உணர முடிந்தது. ஆனால் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். வேறு மொழிகளில் உள்ள பதங்களை, பெரும்பாலும் வழக்கத்தில் இல்லாத பதங்களைக் கொண்டுவந்து தமிழில் திணிக்கக் கூடாது. அப்படித் திணித்தால், தமிழ் அன்னை சக்தி வாய்ந்தவள், அவள் அந்தப் பதங்களையே ஒழித்து விடுவாள், அல்லது அம்மொழிகளையே அடக்கி ஒடுக்கி இயக்கமற்றதாக்கி விடுவாள், அந்த சக்தி தமிழ் அன்னைக்கு உண்டு என்பதை எல்லோரும் உணர்ந்துகொள்ள வேண்டும். ஆனால், இயல்பாகவே தமிழோடு சேர்ந்து வலிய வருபவைகளைத் தமிழ் அன்னை இரு கரங்களாலும் "வாருங்கள், வாருங்கள்" என்று வரவேற்புக் கூறி, ஆசி கூறி பரிவுகொண்டு தனது குழந்தைகளாகவே அவற்றையும் ஏற்றுக்கொள்வாள். இதனை அனைவரும் கருத்தில் கொள்ள வேண்டும். ஆகவே, இந்த மன்றத்தில், (மன்றம் என்று சொன்னால், திரு. ராஜன் அவர்கள் உயர்ந்த மொழியில் பேசுவதாக நினைத்துக்கொள்வார்), இப்பொழுது இருக்கிற பதங்களைக் கையாளலாமே தவிர, தேவையற்ற வேறு மொழிப் பதங்களை வீணாக நுழைக்கக் கூடாது.

கனம் கல்வியமைச்சர் அவர்கள் தமிழ் வளர்ச்சியில், தமிழ் இம்மாநில மொழியாக உயர்ந்தோங்குவதில் நல்ல நாட்டம் கொண்டவர். இச்சபையில் அது நடைமுறையில் வர வேண்டுமென்பதில் என்னை விட அதிக ஆர்வம் கொண்டவர் அவர் என்று நான் முன்னமேயே சொன்னேன்.

14th February 1959] [Vidwan T. Muthukannappan]

தமிழை அவசரம் அவசரமாகக் கொண்டுவர வேண்டுமென்ற எண்ணத்தோடு நான் இத்தீர்மானத்தைக் கொண்டுவரவில்லை. இத்தீர்மானம் கொண்டுவந்ததின் நோக்கமே, இதைப்பற்றிக் கனம் அமைச்சர் அவர்களுக்கு ஞாபகப்படுத்தத்தான். கொஞ்சம் தூண்டுவதற்குத்தான் கொண்டுவந்தேனே தவிர, வேறொன்றுமில்லை. ஆகவே என் கருத்து, என் எண்ணம் நிறைவேறியிருக்கிறது. கல்வியமைச்சர் அவர்கள் நல்ல விளக்கம் கொடுத்தார்கள், உறுதியும் அளித்தார்கள், அதுதான் எனக்கு வேண்டும். மற்றவர்களை விட நான் அதில் பெருமகிழ்ச்சியடைகிறேன் என்று சொல்லிக்கொண்டு நான் எனது தீர்மானத்தைத் திரும்பப் பெற்றுக்கொள்கிறேன்.

(" வாபஸ் " என்று சொல்லுங்கள் என்று சில கனம் அங்கத்தினர்கள் கூறியதற்கு, " வாபஸ் என்று சொல்வதை விடத் திரும்பப் பெற்றுக் கொள்கிறேன் என்று சொல்வதுதான் உங்களுக்குத் தெளிவாகப் புரியும் " என்று வித்வான் டி. முத்துக்கண்ணப்பன் அவர்கள் சொன்னார்கள்.)

MR. CHAIRMAN : Does the House give leave for the Resolution being withdrawn?

HON. MEMBERS : Yes.

The Resolution was, by leave, withdrawn.

(3) USE OF TAMIL FOR ALL CEREMONIAL AND PUBLIC FUNCTIONS.

MR. CHAIRMAN : Sri K. M. Ramasamy Gounder will move his resolution.

SRI MOHAMED RAZA KHAN : May I request permission to move my Resolution first because last time it was moved and could not be proceeded with and ultimately it lapsed?

MR. CHAIRMAN : He may move it next. I allot only ten minutes for Mr. Ramasamy Gounder's Resolution. That includes the time set apart for the Minister's reply also.

* SRI K. M. RAMASAMY GOUNDER : Sir, I move the following Resolution :—

" Since Tamil has been made the Official Language of this State, this House recommends to the Government that Tamil should henceforth be invariably used during all ceremonial func- 4-30 p.m.
tions including visits of foreign dignitaries and other public functions got up by the Government and its officials ".

SRI G. KRISHNAMOORTHY : I second the Resolution.

MR. CHAIRMAN : Resolution moved—

" Since Tamil has been made the Official Language of this State, this House recommends to the Government that Tamil should henceforth be invariably used during all ceremonial functions got up by the Government and its officials."

* **SRI K. M. RAMASAMY GOUNDER :** கனம் அவைத் தலைவர் அவர்களே, முன் தீர்மானத்தை ஒட்டி இதுவும் முன்கூட்டி வந்தது பற்றி மகிழ்ச்சி அடைகிறேன். இந்தத் தீர்மானம் இன்றைய நிகழ்ச்சி நிரலில் வரும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. கனம் கல்வி அமைச்சர் அவர்கள் விருப்பப்படி இதை முன்கூட்டி எடுத்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன். இந்தத் தீர்மானம் முந்திய தீர்மானத்தோடு இணைந்து வருவது என் துரதிருஷ்டமோ அல்லது அதிர்ஷ்டமோ தெரியவில்லை. வித்வான் முத்துக் கண்ணப்பன் அவர்கள் 1956-ல் இயற்றப்பட்ட ஆட்சி மொழிச் சட்டத்தை